# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

97 / 104

சார்வரி – மாசி
2021 – பிப்ரவரி

12.01.2021 அன்று கோவிலூர் மடாலய வளாகத்தில் நடைபெற்ற சமத்துவப் பொங்கல் விழா

உ
சிவமயம்

# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

சார்வரி – மாசி

2021 – பிப்ரவரி இதழ் – 104



வெளியீடு :
**கோவிலூர் மடாலயம்**
கோவிலூர் - 630 307.
மானகிரி (அஞ்சல்),
(வழி) காரைக்குடி
சிவகங்கை மாவட்டம்
போன் : 04565 - 236846

அச்சிட்டோர் :
**திருமகள் அச்சகம்**
"ஜெய சௌந்தர்",
7G, ஜவஹர் தெரு, நியூ டவுன்
காரைக்குடி - 630 001.

### பொருளடக்கம்



தனி இதழ் ரூ 10.00
ஆண்டுச் சந்தா ரூ 100.00

உ
சிவமயம்




# இறை வணக்கம்

மாமேவு கோகனகம் அரும்பல்மல

ருதல்குவிதல் மருவத் தோயாத்

தூமேவு பரிதியெனத் தன்முனர்முத்

தொழில் நடப்பத் தோயாது ஆன்றோர்

பாமேவும் இடங்கொள்வன்னி இரண்டலமூன்

றெனஅமரர் பரவ மேவும்

கோமேவு வன்னிவனக் கொற்றவாள்

ஈசர்பதம் குறித்து வாழ்வாம்.

– கோயிலூர்ப் புராணம்

# ஆசியுரை

## சீர் வளர் சீர் மெய்யப்பஞான தேசிக சுவாமிகள்

சமீபத்தில் நம் தேசத்திற்கு, குறிப்பாக மருத்துவத் துறைக்கு ஒரு மாபெரும் இழப்பு ஏற்பட்டு இருக்கிறது. புற்றுநோய் நிபுணர் டாக்டர். V. சாந்தா அவர்கள் தன்னுடைய 92வது வயதிலே இறைவனடி சேர்ந்திருக்கிறார்கள். டாக்டர் சாந்தா அவர்கள் தொண்டின் திருவுருவமாக ஒற்றைச் சிறு அறையிலே தங்கி லட்சக்கணக்கான நோயாளிகளுக்கு அடையார் புற்றுநோய் மருத்துவமனை மூலமாக மருத்துவம் பார்த்துக் காப்பாற்றிய புண்ணியவதி. இவர்களுடைய தொண்டிற்கு இணையாக, எடுத்துக்காட்டாக வேறு எந்த இந்தியரும் இல்லை. மதர்தெரசா அவர்களும் தன்னலமற்ற தியாக சொருபியாகத் தொண்டாற்றினார்கள் என்றாலும் அவர்களுடைய தொண்டிலே மதம் பரப்புவது என்ற ஒரு நோக்கமும் கலந்து இருந்தது. டாக்டர் சாந்தா அவர்கள் தன்னுடைய மருத்துவ அறிவாலும் அனுபவத்தாலும் லட்சக்கணக்கான புற்றுநோயாளிகளைக் காப்பாற்றி இருக்கிறார். முழுநேரப் பணியாக மருத்துவ சேவை செய்த டாக்டர் சாந்தா அவர்களைத் தெய்வமாகக் கொண்டாடக் கூடிய ஆயிரக்கணக்கான புற்றுநோயிலிருந்து மீண்டவர்கள் இருக்கிறார்கள்.

டாக்டர் சாந்தா அவர்களை நேரில் பார்த்து ஆலோசனை பெற்று அவர்களுடைய மருத்துவ சேவையால் காப்பாற்றப்பட்டவர்களில் என்னுடைய பூர்வாஸ்ரமத் தங்கையும் ஒருவர். 1958ல் தங்கைக்குப் புற்றுநோய் என்று கண்டறியப்பட்டு அடையார் புற்றுநோய் மருத்துவமனையில் சேர்த்தோம். டாக்டர் V.சாந்தா அவர்களின் மருத்துவ சேவையாலும் பராமரிப்பாலும் தங்கை மீண்டெழுந்து 27 ஆண்டுகள் வாழ்ந்து 2012ல் தன்னுடைய 67வது வயதில் இயற்கை எய்தினார். டாக்டர் சாந்தா அவர்களின் சேவையின் சிறப்பையும் கருணை உள்ளத்தையும், நோயாளிகளை உறவினர்களைப் போல் பாவிக்கும் மனிதத் தன்மையையும் நேரில் கண்டு பூரித்தவன் நான். கலங்கி நின்ற நேரங்களில் கண்ணீர் துடைத்து ஆறுதல் கூறித் தேற்றுகின்ற கருணை உள்ளம் கொண்டவர்கள் டாக்டர் சாந்தா

அவர்கள். அவர்களுடைய சேவையும், அக்கறையும் அன்பும் என்றென்றும் நோயிலிருந்து மீண்டவர்களுடைய நெஞ்சிலே நிலைத்திருக்கும்.

டாக்டர். V.சாந்தா அவர்கள் பத்மவிபூஷன் விருது பெற்றவர்கள். அதற்கும் மேலான பாரத ரத்னா விருது கொடுக்கப்பட வேண்டும் என்று நல்லவர்களிடையே ஒரு விருப்பம் இருக்கிறது. அவர்களுடைய விருப்பம் நிறைவேற்றப்பட்டு டாக்டர் V.சாந்தா அவர்களுக்குப் பாரத ரத்னா பட்டம் அளிக்கப்பட வேண்டும் என்று நம் குருமுதல்வர் கோவிலூர் ஆண்டவர் திருவடி சிந்தித்து விரும்புகிறோம்.

அண்மைக் காலத்தில் நாம் தொடங்கிய கோவிலூர் வாழ்வியல் கல்வி மையம் என்ற அமைப்பின் மூலமாக முதன் முதலில் திருக்குறள் மாணவர்களுக்கு இணைய வாயிலாகக் கற்பிக்கப்பட்டது. 50க்கு மேலான குழந்தைகள் கலந்து கொண்டு திருக்குறள் பயின்றார்கள். திருக்குறள் வகுப்பினை வாரம் தோறும் மிக அருமையாகக் குழந்தைச் செல்வங்களின் மனதில் பதியுமாறு சிறப்பாக நம்முடைய கோவிலூர் ஆண்டவர் மெட்ரிக் மேல்நிலைப் பள்ளியின் தமிழ் ஆசிரியை M.வள்ளியம்மை அவர்கள் நடத்தினார்கள். தொடர்ந்து அனைத்துக் குழந்தைகளும் 110 குறள்களையும் தெளிவாகக் கற்றுத் தேர்ந்தார்கள் என்பது மகிழ்ச்சிக்குரிய விஷயம். அவ்வாறு நடத்தப்பட்ட போட்டிகளிலே மிகச் சிறந்த முறையில் திருக்குறளை மூலமும் உரையுடனும் சொல்லிய பத்துக் குழந்தைகளுக்குப் பயனுள்ள புத்தகங்கள் பரிசளிக்கப்பட்டன.

இந்த முதல் முயற்சி வெற்றி அடைந்ததில் நமக்கும் நம்முடைய ஆசிரியப் பெருமக்களுக்கும் மிக்க மகிழ்ச்சி. திருக்குறள் சொல்லிக் கொடுத்த ஆசிரியை M.வள்ளியம்மை அவர்களுக்கு நம்முடைய மனமார்ந்த வாழ்த்துக்கள் பாராட்டுகள். மாணவர்கள் மேன்மேலும் பல அறநூல்களையும், பயனுள்ள நூல்களையும் கற்றுத் தேர்ந்து பயன்பெற வேண்டும், வாழ்வியலில் பயன்படுத்த வேண்டும் என்பது நம் விருப்பம். அனைத்துக் குழந்தைகளுக்கும் நம்முடைய மனம் நிறைந்த ஆசிர்வாதங்கள் பாராட்டுகள்.

இதனைத் தொடர்ந்து கடந்த மூன்று வாரங்களாக வெள்ளிக்கிழமை தோறும் அருணகிரி நாதர் அருளிச் செய்த திருப்புகழ் வகுப்புகளைத் திருமுருகன் திருப்புகழ் பாராயண சபையின் நிறுவனர், பொறியாளர் மெய்யப்பன் சுப்பிரமணியன் அவர்கள் இணைய வழியில் நடத்தி வருகிறார். இந்த வகுப்பில் நம்முடைய மாணவர்கள், அதிலும் மழலைச் செல்வங்கள் கலந்து கொண்டு சிறப்பாகக் கற்றுத் திருப்புகழ் பாடிப் பதிவுசெய்து அனுப்பி இருக்கிறார்கள். ஒரு சில உச்சரிப்புத் தவறுகளைத் தவிர அத்தனை குழந்தைகளுடைய பாடல்களும் மிக நேர்த்தியாக உள்ளன. இதில் கலந்து கொண்டு பயில்கின்ற குழந்தைகளுக்கும் இந்த வகுப்பினை நடத்துகின்ற மெய்யப்பன் சுப்பிரமணியன் அவர்களுக்கும், இதன் ஒருங்கிணைப்பாளர் ஆசிரியை பாண்டிமுத்து அவர்களுக்கும், எல்லாவற்றையும் மேற்பார்த்து உற்சாகம் ஊட்டுகின்ற திருமதி. உமா மெய்யப்பன், நம் கோவிலூர் ஆண்டவர் மெட்ரிக் மேல்நிலைப் பள்ளி முதல்வர் திருமதி. மணிமொழிமோகன், துணை முதல்வர் வள்ளியம்மை அனைவருக்கும் நம் பாராட்டுகள் ஆசிர்வாதங்கள்.

*ஸ்ரீ சற்குருநாதன் துணை*

---

12.1.2021 அன்று சமத்துவப் பொங்கல் விழா நிகழ்வு நடைபெற்றது.

23.1.2021 அன்று காப்பியக் கவிஞர் மீனவன் அவர்களுக்கு நினைவுக் கவிதாஞ்சலி நிகழ்ச்சி நடைபெற்றது.

26.1.2021 அன்று மடாலயக் கல்வி நிறுவனங்களின் சார்பாகக் குடியரசு தினவிழா நடைபெற்றது. அறங்காவலர் திரு. இராமநாதன் அவர்கள் தேசியக் கொடியை ஏற்றி வைத்துச் சிறப்பித்தார்.



## சசிவன்ன போதம் (தொடர்ச்சி)

(சீர்வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்)

88\. அகிலக்க ரிப்பரம துரியப்பொ
ருள்துரியம் அதுஆகையே
புகல்உற்ற தத்வமசி எனும்முப்ப
தத்தின்முடி பொருள் ஆவதே.

(சர்வத்திற்கும்) எங்கும் நிறைந்து சாட்சியாக விளங்குகின்ற ஈசுவர துரியமான பிரம்மமே சிவ துரியமான ஆத்மாவாம். ஈசுவர துரியமாகிய.பிரம்மமானது சிவ சாட்சியாகவும் (ஐக்கியமாய்) இருப்பதை அறிவதே (சாமவேதத்தில் உள்ள சாந்தோக்கிய உபநிஷத்தில் சுவேதகேதுவிற்கு உத்தாலக முனிவர்) கூறியருளிய அது நீ ஆனாய் என்கிற மூன்று சொற்களின் முடிந்த பொருளாம் சீவ சாட்சியானது ஈசுவர சாட்சியாகிய பிரம்மமாகவும் ஈசுவர சாட்சியாய் பிரம்மமானது சீவ சாட்சியாகவும் ஒன்றாய் இருக்கிறது அது நீ ஆனாய் என்ற பதத்தின் பொருளாகும்.

89\. நிமலப்பொ ருள்சுருதி நெறியில்
பெறக்கருணை நிதிகூறவே
அமலப்பொ ருள்பெறுதல் அருமைத்து
எனக்கழறி அடிவீழவே.

கருணா நிதியாகிய நந்திபாராயணர் சுருதி வாக்கிய விசார வாயிலாக நின்மலமாகிய பிரம்மத்தை அடையும்படி உபதேசிக்க (சசிவன்னன்) சுத்த பிரம்மத்தை என் போன்றவர்கள் அடைதல் இயலாது என்று துதித்து குருதேவரின் திருவடிகளை விழுந்து வணங்கினான்.

90\. தமரக்க லைக்குஅளவு தெரிவுஅற்ற
தத்பொருள்அ தனைஈகுவான்
அமரர்க்குஅ ளப்புஅரிய பதம்நல்பு
னல்கொடுசெய்து அபிடேகமே.

தேவர்களாலும் அளவிட்டு அறிதற்கரிய சப்தரூபமாகிய வேதங்களால் (வேதம் எழுதாக்கிளவி எனப்படுதலின்) அறியப்படாத

தத்பதார்த்தமாகியன் பிரம்மமே. துவம்பதார்த்தமாகிய கூடஸ்தன் என்பதனை அங்கை நெல்லிக்கனி போல் சசிவன்னன் அறியும் பொருட்டு ஆசிரியர் தனது பாத தீர்த்தத்தைக் கொண்டு சசிவன்னனுக்கு அபிஷேகம் செய்தருளினார். பிரம்மம் தத் என்ற சொல்லின் சத்தி விருத்திக்கு விடயமன்று. ஆனால் அவற்றின் இலட்சணா விருத்திக்கு விடயமாம் என்பதால் தமரக்கலைக்கு அளவு தெரிவதற்கரிய தற்பொருள் என்றார்.

**91. பவளத்தில் வைத்தஅமிர் தின்இன்மிச்சில்**
**இட்டுஇனிய பரிவோடுமா**
**தவளப்பொ டிக்கவசம் எனவிட்டு**
**உடல்பகைகள் தலைசாயவே.**

இனிமையான அன்பினால் பவளம் போல் சிவந்த இதழ்களில் வைத்துத் திருவமுது செய்தருளிய அமிர்தத்தை ஒத்த பிரசாதம் கொடுத்து அருளினார். உடல் முதலிய ஏமு காரிய உபாதிகள் என்னும் பகைகள் நசிக்கும்படி பெருமை மிக்க வெண்மையான விபூதியைக் கவசம் போல் தரித்து அருளினார்.

**92. உதகத்து உடல்பொருளொடு உயிர்கைக்கொடு**
**உச்சிமிசை ஒருபோதொடே**
**பதகத்த லத்தைவிட இருகைத்**
**தலத்தொடுஇரு பதம்மேவியே.**

நீரினால் சசிவன்னன் தத்தம் செய்த உடல் பொருள் ஆவி மூன்றையும் ஏற்றுக் கொண்டு ஒரு க்ஷணத்திலேயே அஞ்ஞானத்திலிருந்து நீங்கித் தத்துவஞானம் அடைந்து அனுபவத்தைப் பெறுமாறு சிரசின் மீது இரு கரங்களோடு இரண்டு திருவடிகளையும் பொருந்தும் படி செய்து அருளினார். (ஸ்பரிச தீட்சை) அஞ்ஞான பூமிகள் ஏமு: அவை பீஜ சாக்கிரம், சாக்கிரம், மகா சாக்கிரம், சாக்கிர சொப்பனம், சொப்பனம், சொப்பன சாக்கிரம், சுமுத்தி என்பன. தூங்கி விழிப்பதிலிருந்து மறுபடி தூங்குவது வரை உள்ள அஞ்ஞான நிலைகள் விளக்கப்படும். இராசதத்தில் தாமதம் மேலிடும் பொழுது அதில் பிரதி பிம்பமாயுள்ள சிதாபாசன் சோம்பல். நித்திரை மயக்கங்கள் உடையவன் ஆவன். தேகமே ஆத்மா போகமே

மோட்சம் என்று வாழும் நிலை. திருவடி தீர்த்த அபிஷேகம், விபூதி கவசம், திருவடி சூட்டல் ஆகியவற்றால் சசிவன்னன் தாமத இராசத குணங்கள் ஒடுங்கி அவனது தத்துவகுணம் மேலோங்கச் செய்தார். இராசதத்திற் சாத்துவீகம் பிரதானமாகும் போது அதிற் பிரதி பிம்பமாயுள்ள சிதாபாசன் தத்துவ ஞான நிட்டனாவான்.

**93. ஒழியப்பு லக்கண்உப நிடதப்**
**பொருள்தெரிய உளஞானமாம்**
**விழியைக்கொ டுத்துமொழி எனமுப்ப**
**தப்பொருளும் வெளிஆகவே.**

இந்திரிய சுகத்தில் ஆசைகள் ஒழியும்படி உபநிடதங்களில் கூறப்பட்டுள்ள மகா வாக்கியங்களின் அர்த்தம் தெளிவாகும் படியாக ஏதுவாக உள்ள ஞானமாகிய விழியைக் கொடுத்தருளி ஏ சசிவன்னாதத்வமஸி மகா வாக்கியத்தின் கண்ணுள்ள தத் த்வம் அஸி என்னும் மூன்று பதங்களின் அர்த்தங்களையும் நீ அனுபவித்தபடி யாவருக்கும் விளக்கமாகக் கூறுவாய் என்று குருநாதர் சசிவன்னனது அனுபவத்தைச் சொல்லும்படி கேட்கிறார்.

**94. நனவைத்து வக்கிமுடி துரியத்தை**
**முற்றுஇறை நவில்நீதியே**
**மனவர்க்கம் அற்றஅனு பவம்உற்ற**
**சிதககன வலிஓதுமே.**

சாக்கிர முதல் அந்தமான துரியம் ஈறாக ஆசிரியர் அருளிச் செய்த வண்ணமே தான் அடைந்த மனம் முதலான அந்தக் கரணங்கள் நீங்கிய – நனவிற் சுழுத்தியில் பெற்ற பிரம்ம அனுபவத்தை, திறத்தை, சசிவன்னன் கூறத் தொடங்கினான்.

**95. புரணம் ஆகவே புறம்உள**
**புலன்களும் அந்தக்**
**கரணம் யாவையும் வழங்கிடம்**
**நனவுஎனக் கண்டேன்.**

வெளிப்புறமாகச் சொல்லும்படியான ஞானேந்திரியங்கள் கர்மேந்திரியங்கள் ஆகிய பத்தும் மனம் முதலிய அந்தக்

கரணங்களும் இவை அனைத்தும் தம்தம் இடங்களில் இருந்து கொண்டு முழுமையாக விஷயங்களோடு பொருந்திச் செயல் படுகின்ற நிலையே (வியட்டி) சீவனுக்குச் சாக்கிரம் என அறிந்தேன். சாட்சி = விகாரமற்று உதாசீனமாயிருந்து புத்தி முதலியவற்றை விளக்கும் சைதன்னியம் இதற்கு விடயமாகும். உலகனைத்தும் சாட்சியம் எனப்படும். இதை நாம் அறிந்து சாட்சியத்தை விட்டு சாட்சி மாத்திரம் கொள்ள வேண்டும்.

**96. புரணம் ஆகிய புறம்பு உள**
**புலன்கெட அந்தக்**
**கரணம் யாவையும் வழங்குஇடம்**
**கனவுஎனக் கண்டேன்.**

முழுமையாகப் பத்து இந்திரியங்களும் ஒடுங்கி நிற்க, மனம் முதலிய அந்தக் கரணங்கள் அனைத்தும் சாக்கிரத்தில் வாசனையினால் கற்பிக்கப் பட்ட விஷயங்களொடு பொருந்திச் செயல்படும் நிலையே (வியட்டி) சீவனுக்குச் சொப்பனம் என அறிந்தேன்.

**97. மரணம் ஆகிய திசைஇது**
**எனும்படி மனாதி**
**கரணம் யாவையும் இறந்துஉள**
**சுழுத்தியும் கண்டேன்.**

மரணகாலம் போன்றது என்று யாவரும் கூறும்படி மனம் முதலான சகல கரணங்களும் அவித்தையின் கண் ஒடுங்கி இருக்கின்ற (வியட்டி) சீவனுக்குச் சுழுத்தி என அறிந்தேன். சரீரம், உலகம்; தோன்றுகிறது மறைகிறது.

*உறங்குவது போலும் சாக்காடு உறங்கி*
*விழிப்பது போலும் பிறப்பு. (குறள் 337)*

**98. எஞ்சல் இன்றிஎக் கரணமும்**
**இறந்துஇருண்டு இருந்த**
**துஞ்சல் அங்குஉணர் போதமாம்**
**துரியமும் கண்டேன்.**

சிறிதும் மிச்சமில்லாமல் அகக்கரணம், புறக்கரணம் ஆகிய எல்லாக் கரணங்களும் ஒடுங்கி ஒன்றும் தெரியாமல் இருந்து விடய உணர்வு இல்லாமல் இருந்து ஆன்மாவின் வடிவம் (வியட்டி) சீவனுக்குத் துரியம் என அறிந்தேன். சுழுத்தியில் அஞ்ஞானத்தை அறிந்த அறிவே இப்பொழுது சாட்சியாய் விளங்குவதை அறிவாயாக.

**99. துரியம் ஆகிய போதம்ஓர்**
**துளக்கம்அற்று அனைத்தின்**
**கரிய தாய்இருந்த இடம்பரன்**
**நனவுஎனக் கண்டேன்.**

வியட்டி சரீரத்திற்கு சாட்சி உடைய, சமட்டி சரீரங்களுக்கும், பிரபஞ்சத்திற்கும் சாட்சிரூபப் பிரம்மமாய் இருக்கிறது என்று அறியும் அவஸ்தை ஈசுவர சாக்கிரம். தூல பஞ்ச பூதங்களும், அவற்றில் தோன்றிய மூன்று சாதிகளாய் இருக்கின்ற தூல சரீர சமட்டியுங்கூடி ஈசுர தூல சரீரம் என்றும் விராட் என்றும் சொல்லப்படும். இந்த விராட் ஆதிசரீரங்கள், சிருட்டியாதி கிருத்தியங்களுக்குக் கூடஸ்தனே ஆகிய பிரம்மமே சாட்சியாய் நின்று விளங்குகிறது என அறியும் இடமே ஈசுவர சாக்கிரம் என்பதாம்.3 சரீரம், 3 அவத்தை, 3 அபிமானம் + கூடஸ்தன் & ஆத்மா.

*(தொடரும்...)*

## ஓம் நமோநாராயணாய! 108 திவ்யதேசங்கள்

### 6. கோவிலடி என்னும் திருபேர்நகர்.

(அழ.மெய்யம்மை)

(காப்பியக் கவிஞர் நா.மீனவன் அவர்களின் பேத்தி)

108 திவ்ய தேசங்களுள் ஆறாவது திவ்ய தேசம், கோவிலடி என்னும் திருப்பேர் நகர். சோழநாட்டுத் திருப்பதிகளுள், இது ஆறாவது திருத்தலமாகும்.

இத்தலம் கொள்ளிடத்தின் தெற்குக் கரையில் அமைந்துள்ளது.

இத்தலம் ஸ்ரீரெங்கத்திற்கு முன்னதாக ஏற்பட்ட தலமாகும். ஸ்ரீரெங்கம் கோயிலுக்கு ஆதியாக அடியெடுத்துக் கொடுத்த தலமென்பதால் கோவிலடி எனப் பெயர் பெற்றது. இதன் புராதனப்

பெயர் பலாசவனமாகும். இவ்வாலயம் இந்திரகிரி என்று அழைக்கப்படும் சிறுகுன்றின் மேல் அமைந்துள்ளது. கோவிலுக்குள் செல்ல 21 படிகள் ஏற வேண்டும்.

இத்தலத்திற்குப் பெருமாள் எழுந்தருள்வதற்கு முன்பே திருமகள் எழுந்தருளினார். இரு தாயார்களில் பெருமை மிக்கவர் யார்? ஸ்ரீதேவியா? பூதேவியா? என்ற விவாதம் வைகுண்டத்தில் நடந்த பொழுது, அதன் முடிவு பூதேவிக்குச் சாதகமாக அமைய, ஸ்ரீதேவிகோபித்துக் கொண்டு கோவிலடிக்கு வந்து தவம் மேற்கொண்டார். அதனால் இவ்வூருக்கு ஸ்ரீநகர் என்ற பெயர் ஏற்பட்டது. ஆழ்வார்கள் அதனை அழகுத் தமிழில் திருப்பேர் நகர் என்று அழைத்தனர். கோயிலடிக்குப் பெருமாள் எழுந்தருள்வதற்காகவே இந்நாடகம் நடத்தப்பட்டது. ஸ்ரீதேவிக்குக் காட்சியளித்த பெருமாள், பூதேவியை விட நீயே உயர்ந்தவள் என்று ஆறுதல் கூறி, பிராட்டியைத் தன் திருமார்பில் சேர்த்துக் கொண்டார். பெருமாள் தன் மார்பில் ஸ்ரீதேவியைச் சூடிய தலம் இத்திருத்தலம். மகாலட்சுமி இத்தலத்தை விட்டுப் பெயராமல் நிரந்தரமாகத் தங்கி இருப்பதால், இந்தத் திருத்தலத்திற்குத் திருப்பெயராதநகர் என்ற பெயர் ஏற்பட்டு, பின் மருவி திருப்பேர்நகர் ஆயிற்று என்றும் கூறலாம்.

இந்திரனுக்குக் கர்வம் போக்கியும், மார்க்கண்டேயருக்கு எம பயம் போக்கியும், உபரிசிரவசு என்ற மன்னனுக்குச் சாபம் போக்கியும் அருளியதலம் இத்திருத்தலம். துர்வாசரின் சாபத்தால் அசுரர்களால் துரத்தப்பட்டுப் பதவியிழந்த இந்திரனை மீண்டும் தேவலோக அதிபதி ஆக்கினார் இங்கருளியுள்ள பெருமாள்.

கோபியர்கள் கொஞ்சும் குழந்தையாகவும் தோழனாகவும் விளங்கும் அஞ்சனவண்ணன், ஆயர்குலதிலகம், கண்ணன் கோவிலடித் திருத்தலத்தில் சந்தான கோபால கிருஷ்ணனாக அருள்பாலிக்கின்றார்.

**மூலவர் : அப்பக்குடத்தான் என்ற அப்பால ரெங்கநாதர்**
**தாயார் : கமலவல்லித் தாயார் என்ற இந்திராதேவித் தாயார்**
**கோலம் : மேற்கு நோக்கிய கிடந்த திருக்கோலம்**
**தீர்த்தம் : இந்திரதீர்த்தம்**

**விமானம் : இந்திரவிமானம்**

**தலவிருட்சம் : புரசமரம்**

இக்கோயில் இரட்டைப் பிரகாரங்களுடன் அமைந்துள்ளது. பிரகாரத்தின் முடிவில் வழிகாட்டி விநாயகர் இருக்கின்றார். இக்கோயிலின் மூன்றுநிலை இராஜகோபுரம் நுட்பமான அழகிய வேலைப்பாடுகள் நிறைந்தது.

நான்கு ஆழ்வார்கள் மங்களாசாசனம் செய்துள்ளதலம் இத்தலம். இத்திவ்ய தேசத்தைப் பெரியாழ்வார் இரண்டு பாசுரங்களாலும், திருமங்கையாழ்வார் 19 பாசுரங்களாலும், திருமழிசையாழ்வார் ஒரு பாசுரத்தாலும், நம்மாழ்வார் 11 பாசுரங்களாலும், ஆக மொத்தம் 33 பாசுரங்களால் மங்களாசாசனம் செய்துள்ளனர். திருமங்கையாழ்வார் இவரை மங்களாசாசனம் செய்துவிட்டு திருவெள்ளறை செல்கிறார்.அப்பக்குடத்தான் திருமங்கை மன்னனைவிடாது அங்கும் பின் தொடர்கிறார். தம்மை விட்டு நீங்காத அந்த அர்ச்சாவதார ஜோதியைத் திருவெள்ளறை சென்று கண்டேன் என்று மீண்டும் மங்களாசாசனம் செய்கிறார்.

**துளக்கமில் சுடரை, அவுணனுடல்**
**பிளக்கும் மைந்தனைப் பேரில் வணங்கிப் போய்**
**அளப்பிலா அமுதை அமரர்க்கருள்**
**விளக்கினை, சென்று வெள்ளறைக் காண்டுமே.**

இத்திருத்தலம் திருச்சியிலிருந்து 20கி.மீ. தொலைவிலும், கல்லணையிலிருந்து 7கி.மீ தொலைவிலும் அமைந்துள்ளது. தஞ்சாவூர் மாவட்டத்தில் திருக்காட்டுப்பள்ளி அருகே கோவிலடியில் இத்திருத்தலம் அமைந்துள்ளது.

என் அய்யா காப்பியக் கவிஞர் நா. மீனவனார், திருப்பேர் என்கிற கோவிலடி குறித்துப் பரந்தாமன் பாமாலை என்ற நூலில் எழுதிய ஐந்து பாடல்கள் இதோ!

1. **பேரேஉறைகின்றபிரான் இன்றுவந்து**
   **பேரேனென்றுஎன்னெஞ்சு நிறையப் புகுந்தான்**
   **காரேழ் கடலேழ் மலையேழ் உலகுண்டும்**
   **ஆராவயிற்றானை அடங்கப் பிடித்தேனே.**

என்று பாடுகிற நம்மாழ்வார் பெருமானை அடங்கப் பிடித்துக் கொண்டு திருப்பேர்நகரில் மோட்சம் அடைந்தார் என நம்பப் படுகிறது. நம்மாழ்வாரால் கடைசியாக மங்களாசாசனம் செய்யப்பட்ட திருத்தலம் இதுதான். எனவே இத்தலம் வந்து வழிபடுவோர்க்கு வைகுண்டவாசம் நிச்சயம்.

**உற்றேன் உகந்துபணிசெய்துஉன்பாதம்**
**பெற்றேன் ஈதேயின்னம் வேண்டுவதுஎந்தாய்!**
**கற்றார்மறைவாணர்கள் வாழ் திருப்பேராற்கு**
**அற்றாரடியார் தமக்கு அல்லால் நில்லாவே**

என நம்மாழ்வார் பாடுகின்ற கோவிலடி என்ற திருப்பேர்நகரைக் கும்பிட்டு, இனிய பாசுரங்கள் பாடுகின்ற பரகாலன் என்னும் திருமங்கையாழ்வாரின் ஆவியெனவிளங்கும் அழகனை வணங்கச் சொல்லும் முதல் பாடல்:

**நாவிலடித் தமிழ்நடத்தும் நம்மாழ்வார் பாடுபுகழ்க்**
**கோவிலடிஎன்றதிருப் பேர்நகரைக் கும்பிட்டுப்**
**பாவிலடி இனியபடிபாடுகின்ற பரகாலன்**
**ஆவியெனவிளங்குமுயர் அழகனைநாம் வணங்குதுமே.**

2. பஞ்சரங்கம் என்று சொல்லக் கூடிய ஐந்து அரங்கங்களில் இதுவும் ஒன்று.

**ஆதிரெங்கம் - ஸ்ரீரெங்கப்பட்டினம் (மைசூர்)**
**அப்பாலரெங்கம் - திருப்பேர்நகர்**
**மத்தியரெங்கம் என்ற கஸ்தூரி ரெங்கம் - ஸ்ரீரெங்கம்**
**சதுர்த்தரெங்கம் என்ற சாரங்கம் - கும்பகோணம்**
**பரிமளரெங்கம் - இந்தளூர் (மாயவரம்)**

ஸ்ரீரங்கத்திலிருந்து தள்ளி, அதாவது ஸ்ரீரங்கத்திற்கு அப்பால் உள்ளதால், இத்தலம் அப்பாலரெங்கம் என்று அழைக்கப்படுகின்றது. ஐந்து அரங்கங்களில் ஒரு அரங்கமான அப்பால ரெங்கத்தில் இருக்கும் திருப்பேரான், இராம அவதாரத்தில், குரங்குகளைப் படையாக்கி இராவணனைக் கொன்றபிரான், இருந்து அருள் செய்யும் கோவிலடியைப் போற்றச் சொல்லும் இரண்டாம் பாடல்:

**அரங்கைந்தில் ஓர்அரங்கம் அப்பால இரங்கமிது**
**வரங்கொடுக்கும் திருப்பேரான் வலியரக்கன் திறலழியக்**
**குரங்குகளைப் படையாக்கி இராவணனைக் கொன்றபிரான்**
**இரங்கியருள் கோவிலடி இன்றுமுதல் போற்றுதுமே.**

3. உபரிசரவசு என்ற பாண்டிய மன்னன், மதம் பிடித்த ஒரு யானையை வேட்டையாடச் சென்றான். அப்பொழுது தவம் செய்து கொண்டிருந்த ஒரு யோகியைத் தவறுதலாகக் கொன்று விட்டான். அதனால் மனமுடைந்த அவன், தன் அரசபதவியைத் துறந்து, பாவ விமோசனம் வேண்டி, திருப்பேர்நகரில் கடுந்தவம் செய்தான். அப்போது சிவபெருமான், மன்னன் முன் தோன்றி, அருளாசிகள் வழங்கி, அவ்விடத்தில் பெருமாள் கோவில் ஒன்றைக் கட்டுமாறு பணித்தார்.

ஸ்ரீமன் நாராயணன் அம்மன்னனுக்குப் பாபவிமோசனம் அளிக்கும் வரை, தினம் பெருமாளைத் தொழுது, பிராமணர்களுக்கு அப்பத்தையும், பாயசத்தையும் அன்னதானமாக வழங்குமாறும் சிவபெருமான் கூறினார். அதன்படி, அம்மன்னன் திருப்பேர்நகரில் கோயில் கட்டி, தினம் அன்னதானம் வழங்கி வந்தான். ஒரு நாள், பெருமாள், ஓர் ஏழை பிராமணர் உருவில் மன்னன் முன் வந்து, தான் நெடுந்தூரத்தில் இருந்து வருவதாகவும், கடும் பசியில் உள்ளதாகவும் கூறினார். நூறு பேருக்கான அப்பங்களை உண்ட பின்னரும், பெருமாள் தன் பசி தீர்ந்த பாடில்லை என்றுரைத்ததால், மேலும் உணவு சமைத்து வழங்கச் சற்று நேரம் ஆகுமென்பதால், அதுவரை பெருமாளைத் தன் வீட்டில் ஓய்வெடுத்துக் கொள்ளுமாறு மன்னன் வேண்டினான்.

அதே நேரத்தில், தன் பக்தனான உபமன்யு என்ற மார்க்கண்டேய முனிவரின் முன் தோன்றிய சிவபெருமான், திருப்பேர் நகரில் ஒரு ஏழைப் பிராமணர் வடிவில் பெருமாள் வந்து தங்கியிருக்கும் விஷயத்தைக் கூறினார். மார்க்கண்டேயர் தனது 16வது வயதில் மரணமடைவார் என்று விதிக்கப்பட்டிருந்தது. அதனால் இறவாவரம் கிடைக்க, பெருமாளின் அருளாசியைப் பெறுவதுதான் ஒரே வழி என்று கூறிமறைந்தார்.

அம்மன்னனின் வீட்டுக்குச் சென்ற மார்க்கண்டேய ரிஷி, சயன கோலத்தில், ஒரு கையில் அப்பக்குடத்துடன் இருந்த ஏழை பிராமணரை நூறு முறை பணிந்தெழுந்தார். உடனே பெருமாள், அவருக்குத் தன் சுயரூபம் காட்டி, வலக்கையை உயர்த்தி அவரை ஆசிர்வதித்து, இறவாவரமளித்தார். உபரிசரவசுவுக்கும் சாபவிமோசனம் வழங்கினார்.

அதனால், இத்தலத்தில் உள்ள மூலவர், புஜங்க சயனத்தில், உபமன்யு என்கிற மார்க்கண்டேய முனிவரை வலக்கையால் அணைத்து இரட்சித்தவாறும், பால் நிறைந்த அப்பக்குடத்தை இடக்கையில் ஏந்தியும் காட்சியளிக்கிறார். இங்கு பெருமாளுக்குத் தினமும் இரவில் அப்பம் பிரசாதமாக நைவேத்யம் செய்யப்படுகிறது. 108 திருப்பதிகளுள் இத்தலப் பெருமாளுக்குத்தான் தினமும் இரவில் அப்பம் செய்து படைக்கப்படுகிறது. மார்க்கண்டேய ரிஷி இத்தலத்தில், இறவாவரம் வேண்டிப் பெற்றதால், அவர் தினம் ஸ்நானம் செய்தகுளம், மிருத்யுவிநாசினி என்று போற்றப்படுகிறது.

மார்க்கண்டேயருக்குச் சிவனாரும் பெருமாளும் சேர்ந்து அருளியது, சைவ - வைணவ இணக்கத்திற்குச் சிறந்த எடுத்துக் காட்டாகும்.

தளர்ச்சி நிலையில் தவமிருப்போர்க்கு வீடு பேற்றைஅருளும், அழகுடைய திருப்பேர்நகரில், கமலநாச்சியுடன் இருக்கும் அப்பக்குடத்தானின் திருவடியைப் போற்றச் சொல்லும் மூன்றாம் பாடல்:

**அப்பக் குடத்தான் அழகுதிருப் பேருடையான்**
**ஒப்பரியகமலவல்லி உடனாய செஞ்சோதி**
**எய்ப்பில் தவமுடையார் வீடுபெற இருந்தருளும்**
**அப்பன் திருவடியைஅனவரதம் போற்றுதுமே.**

**4. கொண்டல்வண்ணா! இங்கேபோதராயே**
**கோயிற்பிள்ளாய்! இங்கேபோதராயே**
**தெண்திரை சூழ்திருப் பேர்க்கிடந்த**
**திருநாரணா! இங்கே போதராயே**
**உண்டுவந்தேன் அம்மமென்றுசொல்லி**

**ஓடிஅகம்புகஆய்ச்சிதானும்**
**கண்டெதிரேசென்றெடுத்துக் கொள்ளக்**
**கண்ணபிரான் கற்றகல்விதானே**

என்று பெரியாழ்வார் பாடிய திருமொழியைச் செவிகுளிரக் கேட்டபிரான் இருக்கின்ற கோவிலடி பிறப்பறுக்கும் திருத்தலம் எனக் கூறும் நான்காம் பாடல்:

**பேருடையதெய்வப் பெரியாழ்வார்பாடியநற்**
**சீருடைய திருமொழியைச் செவிகுளிரக் கேட்டபிரான்**
**ஏருடையஅரவணையான் இருநிலம் தானளந்தான்**
**பேர்நகராம் கோவிலடிபிறப்பறுக்கும் திருப்பதியே.**

5. அழுது, அருச்சித்து, தொழுது, துதித்து, கோவிலடியில் இருக்கும் மாயோனைத் தொழுவோர், வானமரர் தொழுதேத்த வாழ்ந்திடுவார் எனக் கூறும் ஐந்தாம் பாடல்:

**அழுதால் வினையகலும் அருச்சித்தால் வீடுதரும்**
**தொழுதால் பிணியகலும் துதித்தால் துயரகலும்**
**மழைகொள் கரியமுகில் மாயோன்நற் கோவிலடி**
**தொழுவார் வானமரர் தொழுதே வாழ்ந்திடுவார்.**

பாசுரப்பாடல்:

காஞ்சிபுரத்தில் உள்ள அனைத்து திவ்ய தேசங்களையும் ஒன்றிணைத்திருக்கிறார் திருமங்கையாழ்வார். காஞ்சிபுரத்தில் உள்ள திருநீரகத்தில் நிலைத்து நிற்பவனே! சொர்க்கலோகத்தில் இருப்பவர்களும் வழிபடும் திருப்பதி திருமாலே! நிலாத்திங்கள் துண்டத்தில் ஒளிவீசுபவனே! எல்லா வளமும் நிறைந்த திருஊரகத்தில் எழுந்தருளியிருப்பவனே! திருவெஃகா ஆலயத்தில் இருப்பவனே! நினைத்தவர்கள் உள்ளத்தில் உறைபவனே! எல்லா உலகங்களும் புகழ்ந்து துதிக்கும் திருக்காரகம் என்னும் திருப்பதியின் தலைவனே! திருக்கார் வானத்தில் வாழ்பவனே! திருக்கள்வனூரைச் சேர்ந்தவனே! அழகிய காவிரியின் தெற்குப் பக்கத்தில் இருக்கும் திருப்பேர்நகர் தெய்வமே! என்னுடைய நெஞ்சத்தில் நீங்காது இருக்கும் பகவானே! உன்னுடைய திருவடிகளை வணங்குகிறேன்! எனக் கூறும் திருமங்கையாழ்வாரின் மங்களாசாசனப் பாடல்:

நீரகத்தாய் நெடுவரையினுச்சிமேலாய்!
நிலாத்திங்கள் துண்டகத்தாய்! நிறைந்தகச்சி
ஊரகத்தாய்! ஒண்துரைநீர் வெஃகாவுள்ளாய்
உள்ளுவாருள்ளத்தாய்! உலகமேத்தும்
காரகத்தாய்! கார்வானத்துள்ளாய் கள்வா!
காமருபூங்காவிரியின் தென்பால் மன்னு
பேரகத்தாய்! பேராதுஎன் நெஞ்சினுள்ளாய்!
பெருமான்உன் திருவடியே பேணினேனே.

## பரமஹம்சர் மொழிந்த உருவகக் கதைகள்

தருபவர் : பேராசிரியர். மு.பழனி இராகுலதாசன்

24

ஓரிடத்தில் ஓர் அகன்ற குளம் இருக்கிறது. அந்தக் குளத்திற்கு நான்கு திசைகளிலும் படித்துறைகள் இருக்கின்றன; குளத்தில் தண்ணீர் அள்ளிக் கொள்ள விரும்புகிறவர்கள், ஏதாவது ஒரு துறைவழியே இறங்கி வந்து தண்ணீரை அள்ளிக் கொண்டு போவார்கள்.

குளத்தின் வடதிசைப்பக்கம் இருக்கும் படித்துறை வழியே ஒருவர் உள்ளே இறங்குகிறார்; இறங்கி, கொண்டு வந்த குடத்தில் தண்ணீரை நிரப்பிக் கொள்கிறார்; நான் அள்ளியது பானி என்கிறார்; அடுத்தவர் தென்திசைப் படித்துறை வழியே உள்ளே இறங்கி, தண்ணீரைக் குடத்தில் நிரப்பிக் கொண்டு தண்ணீர் என்கிறார். இன்னொருவர் மேற்குத் திசைப் படித்துறை வழியே உள்ளே இறங்கி நான் அள்ளியது வாட்டார் என்கிறார்; இன்னொருவர் கிழக்குத் திசைப் படித்துறை வழியே உள்ளே இறங்கித் தண்ணீரை அள்ளிக்கொண்டு ஜலம் என்கிறார். நான்கு மனிதர்களும் நான்கு வேறு வேறு வழிகளில் உள்ளே இறங்கினார்கள்; வேறு வேறு பாத்திரங்களில் தண்ணீரை அள்ளினார்கள்; வேறு வேறு மொழிகளிலே சொல்லிக் கொண்டார்கள்; ஆனால் அவர்கள் அள்ளிக் கொண்டது தண்ணீர் என்ற ஒரே பொருளைத்தான்;

கடவுள் என்பதும் அப்படித்தான்; அவர் ஒரே ஒரு பொருள்தான்; ஆனால் அவரவரும் அவரவருக்கு ஏற்ற படி தெரிந்த படி வேறு வேறு பெயரிட்டு அழைத்துக் கொள்கிறார்கள்.

## 25

தாய்ப்பூனை தனது குட்டிப்பூனையை எந்த இடத்திலும் வைத்துவிட்டுப் போய்விடும்; சில நேரத்தில் சமையல் அறையில் வைக்கும்; சில நேரத்தில் ஒரு மெத்தை மீதும் வைத்துவிட்டுப் போய்விடும்; சில நேரத்தில் ஏதாவது ஒரு குப்பை மேட்டில் கூட வைத்துவிட்டுப் போய்விடும்; தாய்ப் பூனை எங்கே இருக்கிறது என்று குட்டிப் பூனைக்குத் தெரியாது. ஆனால் பார்க்க நினைக்கும்போது அல்லது கஷ்டம் ஏற்படும்போது மியாவ், மியாவ் என்று மட்டுமே மெல்லிய சப்தத்தில் குரல் கொடுக்கும்; இந்த மெல்லிய குரலைக் கேட்டவுடன் தாய்ப்பூனை எங்கிருந்தாலும் ஓடி வந்து விடும். பக்தனும் இப்படித்தான்; மெல்லிய குரல் கொடுத்தால் போதும்; இறைவன் ஓடோடி வந்துவிடுவான்.

## 26

உலகப் பற்றுக்களில் மனம் படிந்து கிடந்தால் இறைவனின் காட்சி கிடைக்காது. நெருப்புக்குச்சி ஈரம் படிந்துகிடந்தால் நெருப்புப் பெட்டியில் எத்தனை முறை உரசி, உரசிப் பார்த்தாலும் நெருப்பு பிடிக்காது.

## 27

ஒரு நாள் ராமகிருஷ்ணரும் சீடர்கள் சிலரும் கங்கையில் நீராடப் போய்க் கொண்டிருந்தார்கள். சாலையில் ஒரு பாலம் குறுக்கிட்டது. பாலத்தின் மீது எழுப்பப்பட்டிருந்த சுவர்களில் ஆட்கள் சிலர் உட்கார்ந்திருந்தனர். அவர்களில் ஒருவர் ராமகிருஷ்ணரைப் பார்த்து, என்ன பூசாரி சௌரியமா? என்று குரல் எழுப்பினான். ராமகிருஷ்ணரும், சீடர்களும் எதுவும் பதில் உரை சொல்லாமல் இடத்தைக் கடந்து சென்றனர். இப்படி மரியாதை இல்லாமல், யாரோ ஒரு மனிதரைப் பார்த்துக் கேட்பதைப் போல, அந்த ஆள் கேட்கிறானே என்று சற்று வருத்தப்பட்ட சீடர்களில் ஒருவர், ராமகிருஷ்ணரைப் பார்த்து, மகராஜ், சுவரின் மீது உட்கார்ந்திருந்த ஒரு நாள், உங்களைப் பார்த்து, சிறிது கூட மரியாதை இல்லாமல் பேசினானே என்றார். அதற்குச் சிரித்துக் கொண்டே இராமகிருஷ்ணர் சொன்னார் : வேறு

ஒன்றுமில்லை, அந்த ஆள், கொஞ்ச நாள் முன்பு நம்முடைய ஆஸ்ரமத்துக்கு வந்து போய்க் கொண்டிருந்தார்; இடையில் வரவே இல்லை; வேறு எங்கேயோ போய்த் திரிந்து கொஞ்சம் காசு பணம் சம்பாதித்துக் கொண்டு வந்திருப்பார். அந்தக் காசு இப்போது பேசுகிறது, அவ்வளவு தான்.

*(தொடரும்...)*

## கம்பராமாயணம் (தொடர்ச்சி)

### (இராமனின் தம்பிகள்)

**(சீர்வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்)**

தங்களை உபசரித்த தவச் செல்வர்களின் வேண்டுகோளின் வண்ணம் அன்று இரவு அவர்களுடைய ஆசிரமத்தில் தங்கினார்கள். இராமனும் சீதையும் நாணற்புல்லைப் பரப்பி அதிலே படுத்து உறங்கினார்கள். இலக்குவன் வில் ஏந்தி இரவு முழுவதும் காவல் காத்தார்.

காலை எழுந்து தவச் செல்வர்களுடன் இராமர் உரையாடிக் கொண்டிருந்த பொழுது குகன் எனும் சிருங்கிபேர்ப் பகுதியின் தலைவனும் ஆயிரக்கணக்கான படகுகளின் உரிமையாளனுமாகிய குகன் இராமபிரான் வந்திருப்பதை அறிந்து அவருக்குத் தொண்டு செய்யும் எண்ணத்திலே ஆசிரமத்திற்கு வந்து நின்றான். உடன் பக்குவப்படுத்தப்பட்ட மீனும் மலைத் தேனும் அவர்களுக்கு உணவாகச் சமர்ப்பிக்க எடுத்து வந்தான். தவம் இயற்றுவோர் புலால் உண்ணக் கூடாது என்கிற விவரம் கூட அறியாத பாமரனுடைய அன்பைக் கண்டு அவன் தான் கொண்டு வந்த பொருள் அனைத்தையும், உரைத்த மொழிகளையும் கண்டு இராமபிரான் அந்த வேடனுடைய உள்ளத்தன்பை உள்ளுணர்வை நன்றாகப் புரிந்து கொண்டு அவனை அமர்க என்று உரைத்தார்.

குகன் இராமபிரானை நோக்கி, சுவாமியே என்னிடம் ஆயிரக்கணக்கான படகுகளும் நூற்றுக்கணக்கான சேவகர்களும் இருக்கிறார்கள். அனைவரும் உங்களுக்குத் தொண்டு செய்யக் காத்திருக்கிறோம். இங்கேயே தங்கி 14 ஆண்டுகள் சுகமாகத் தவம் செய்யலாம். உங்களுக்குத் தொண்டு புரியும் பாக்கியத்தை எங்களுக்கு அளியுங்கள் என்று வேண்டி நின்றான். அவனுடைய

உண்மையான அன்பைக் கண்டு மனம் உருகி அவனைத் தங்களுடைய சகோதரனாக ஏற்றுக் கொண்டார்.

*முன்பு உளெம், ஒரு நால்வேம்; முடிவு உளது என உன்னேல்*
*அன்பு உள, இனி, நாம் ஓர் ஐவர்கள் உளர் ஆனோம்;*
என்றார்.

தனது தம்பியர் மூவருடன் குகனை ஐந்தாவது தம்பியாக இராமர் ஏற்றுக் கொண்டார்.

அதன் பின்னர் தான் தன்னுடைய தந்தைக்கு 14 ஆண்டுகள் கானகத்திலே தவம் செய்வதாக வாக்குறுதி அளித்து வந்திருப்பதால் உன்னுடைய வேண்டுகோளை நான் தற்பொழுது ஏற்க முடியாது. உன் அன்பையும் பாசத்தையும் நாங்கள் என்றும் மறவோம். திரும்பி வரும்போது உன்னுடன் தங்கிச் செல்வோம் என்று கூறி விடைபெற்றுக் கொண்டார்கள்.

சற்றே இளைப்பாறிய பின் அங்கிருந்து தவச் செல்வர்களிடம் விடைபெற்றுக் கொண்டு காட்டிலே மேலும் நடந்து சென்று பரத்துவாசர் என்கிற முனிவருடைய ஆசிரமத்தை மூவரும் அடைந்தார்கள். பரத்துவாசருடைய உபசரிப்புகளை ஏற்று அவரைப் பணிந்து வணங்கி அன்றைய இரவு அவருடைய ஆசிரமத்திலே கழித்தார்கள்.

பரத்துவாசரிடம் விடைபெற்றுக் கொள்ளும் பொழுது தன்னுடன் தங்கித் தவம் செய்யுமாறு வேண்டிக் கொள்ள இராமபிரான் தந்தை தாயாருக்கு அளித்த வாக்குறுதியைக் கூறி மறுதளித்தார், மன்னிப்பும் வேண்டினார். அப்பொழுது பரத்துவாசர் அப்படியெனில் சித்திரகூட மலைச்சாரலில் தங்குமாறு ஆலோசனை கூறி அனுப்பி வைத்தார்.

அவருடைய ஆலோசனையின் வண்ணம் சித்திர கூடம் எனும் கங்கைக் கரையின் ஓரத்தைச் சென்று அடைந்தார்கள். செல்லுகின்ற வழியெல்லாம் பாலை மணல், சுடும் கற்கள், முள்கள் அளித்த வேதனையையும் சீதா பிராட்டி தாங்கிக் கொண்டு தொடர்ந்து வந்ததைக் கண்டு இராமபிரான் ஒரு புறம் வருத்தமும் ஒரு புறம் பெருமையும் கொண்டார். சித்திர கூடத்தை அடைந்ததும் இலக்குவன் அங்குக் கிடைத்த மரம் செடி கொடிகளாலே மிக அழகான

பர்ணகசாலை ஒன்றை அமைத்தார். அந்தப் பர்ணகசாலையிலே இராமன் தவம் செய்யத் தொடங்கினான். இலக்குவன் அல்லும் பகலும் இராம பிரானுக்கும் சீதா பிராட்டிக்கும் தொண்டு செய்து காவலும் புரிந்து வந்தான்.

இவற்றிற்கு இடையில் வசிஷ்டர் அனுப்பிய தூதர் கொண்டு வந்த செய்தியான உனக்கு அவசர வேலை இருக்கிறது உடனே வரவும் என்ற சுருக்கமான செய்தியைக் கேட்டுக் குழம்பினான் பரதன். இருந்தாலும் வசிஷ்டருடைய சொல்லுக்குக் கட்டுப்பட வேண்டும் என்ற தர்ம நெறி காரணமாகத் தன் பாட்டன் கேகய மன்னனிடமும் தன் தாய் மாமனிடமும் விஷயத்தைச் சொல்லி, தான் கோசல நாட்டிற்குச் செல்வதற்கான ஏற்பாட்டைச் செய்ய ஆரம்பித்தான். அப்பொழுது பரதனிடம் கைகேயிக்கும், தசரதசக்கரவர்த்திக்கும் நிறைந்த அளவு பரிசுப் பொருள்களைக் கொடுத்துப் பரதனை அனுப்பி வைத்தார்கள்.

பரதனும் சத்ருக்கனனும் கோசல நாட்டின் எல்லைக்குள் வந்ததும் தம் நாடு நகரமெல்லாம் அமைதியாகவும் மக்கள் நடமாட்டம் இன்றியும் இருந்தது கண்டு பரதன் மிக ஆச்சரியப்பட்டான். தொடர்ந்து நகர் வாயிலை அடைந்ததும் எந்த விதமான நடவடிக்கையும் இன்றி மயான அமைதியாக உள்ள வீடுகளையும் மக்களையும் பார்த்து என்ன நடந்து இருக்கும் என்று பரதன் அச்சத்துடன் அரண்மனைக்குள் நுழைந்தான். தன் மாமன் கொடுத்த பரிசுப் பொருள்களை முதலில் சக்கரவர்த்தியிடம் கொடுப்பதற்காகத் தசரதனுடைய அரண்மனைக்குச் சென்று அவர் அங்கு இல்லாதது கண்டு கைகேயியின் அரண்மனையில் இருப்பார் என்று எண்ணிக் கைகேயியின் அரண்மனையை அடைந்தான்.

தாயே தசரத சக்கரவர்த்தி எங்கே என்று கேட்க அவர் வானுலகம் அடைந்துவிட்டார். நீ வருத்தப்படாதே என்ற சொற்களைக் கேட்டுச் சித்தம் கலங்கி நெடுமரம் போல் விழுந்து அழுது புலம்பினான். கைகேயியிடம் ஏதும் கேட்காமல் இராமனைப் பார்த்து ஆறுதல் அடையலாம் என்று எண்ணி அண்ணன் இராமன் எங்கே என்றான்.

இராமன் தன் தம்பி இலக்குவனுடனும் மனைவியுடனும் தவம் செய்வதற்காகக் காட்டிற்குச் சென்று இருக்கிறான் என்று கைகேயி

கூறினாள். உடனே பரதன் இராமபிரான் என்ன பிழை செய்தார் காட்டில் தவம் செய்ய என்று கோபத்துடன் வினவ, தான் கேட்ட மூன்று வரங்களாலே இராமன் முடி சூட்டிக் கொள்ளவில்லை, முடிசூட்டிக் கொள்ளும் உரிமை உன்னைச் சேர்ந்தது, இராமன் 14 ஆண்டுகள் தவம் ஏற்றுக் காடு சென்றான் என்று சொன்னாள். பரதன் தீயில் விழுந்த புழுப் போலத் துடிதுடித்து வருந்திக் கோபம் கொண்டு கைகேயியினைப் பார்த்துத் தன்னை அன்போடு வளர்த்தவனைக் கடித்துக் கொல்லும் பாம்பு போல் தான் பெற்ற குழந்தையையே எடுத்துத் தின்னும் நாயைப் போல நீயும் செயல்பட்டு இருக்கிறாய். நீ எனக்குத் தாயும் இல்லை நான் உனக்கு மகனும் இல்லை என்று பலவாறாகச் சினத்தோடு கைகேயியை ஏசி அன்னை கோசலையைப் பார்த்து ஆறுதல் பெறக் கோசலையின் அரண்மனையை அடைந்தான். கோசலையின் முக பாவத்தையும் அவளுடைய வருத்தத்தையும் கண்டு தன் மேலும் கோசலை அன்னை ஐயப்படுகிறாள் என்று அறிந்து என்னைப் பெற்றவள் செய்த பாவக்காரியம் எதுவும் எனக்குத் தெரியாது என்று கதறி அழுதான். உடன் அவனுடைய தூய உள்ளத்தை அறிந்து கௌசல்யா அவனை எடுத்து அணைத்து ஆறுதல் சொன்னாள்.

வசிஷ்ட முனிவர் மக்களில் இருவர் வந்ததும் தசரத சக்கரவர்த்திக்கு ஈமச் சடங்குகளைச் செய்வதற்குத் தயார் செய்தார். அதற்குப் பரதன் முன்வர முனிவர் பரதனைத் தடுத்து, சக்கரவர்த்தி இறக்கும் தருவாயில் நீ அவர் மகன் இல்லை என்று ஆணையிட்டு உனக்கு ஈமச் சடங்கு செய்யும் உரிமையும் கிடையாது என்று சொல்லி விட்டார் என்றார்.

நான் தந்தைக்கு மகன் இல்லை என்று கேட்கின்ற பழிச்சொல்லையும் எனக்குத் தந்தவள் எனக்குத் தாய் இல்லை பேய் என்று அரற்றினான்.

வசிஷ்ட முனிவர் சத்துருகனனைக் கொண்டு அனைத்து ஈமச் சடங்குகளையும் சிறப்பாகச் செய்து முடித்தார்.

*(தொடரும்...)*

15.எல்லையில் பிறப்பெனும் இருங்கடல் கடத்தியென்
16.அல்லலை நீக்கிய அருட்பெருஞ்சோதி என்னும் பதினாறு வரிகளின் பொருள் கண்டோம். இதன் மூலம் பலபிறவிகள் எடுக்கும் எல்லையற்ற பிறவிக்கடலைக் கடந்து பிறவா நெறி பெற வேண்டும் என வள்ளலார் வேண்டுவதை உணரலாம்.

இனி மனிதன் கடவுள் நிலை அடையும்
10.ஏறா நிலைமிசை ஏற்றியது
17.ஏற்ா நிலைமிசை ஏற்றி யென்றனக்கே
18.ஆறாறு காட்டிய அருட்பெருஞ்சோதி

பொருள் : ஏறா நிலைமிசை ஏற்றி என்றனக்கே: இவ்வரியின் பொருள் அறிவோம். கடவுள் அங்கிங் கெனாதபடி எங்கும் பிரகாசமாய் (பேரொளி) வடிவமாய் எங்கும் நீக்க மற நிறைந்திருக்கும் இறைவனைச் சுழிமுனை வட்டத்தில் குண்டலினி ஆற்றலை ஏற்றி அதாவது புருவ மையத்தில் நிறுத்தி மனத்தை ஒருநிலைப்படுத்தி இறையாற்றலை எண்ண வேண்டும், பிறகு சாந்த நிலைப்படுத்தி (சாந்தி தவம்) துரிய நிலைக்குச் (உச்சந்தலை) செல்ல வேண்டும். பின் தலைக்கு மேல் துரிய+அதீதம் துரியாதீதம் - துரியம்-விரைந்து ஒரு நிலைப்படுதல்; அதன் பின் ஆயிரம் தாமரை மலர்களில் நிறைந்திருக்கும் அருள் தேனை உள்ளத்தில் உணர்ந்து திளைக்கும் நிலை. இதைச் சகஸ்ராரம் என்றும் துரியா தீதம் என்றும் அழைப்பர். வள்ளலார் இதைத் தேனென இனிக்கும் திருவருட் கடலே என்கிறார், இதன் மேல் இறைநிலை சுத்த வெளியாய் வெட்ட வெளியாய் எங்கும் பரவியிருக்கிறதாம், இதையே தாயுமானவர் அங்கிங் கெனாதபடி எங்கும் பிரகாசமாய் ஆனந்த பூர்த்தியாகி (பேரின்ப நிலை) என்கிறார். இந்த உயர் நிலை பெற்றதும். ஞானியர் யோகியர், கண்ட வேதாந்தம், சித்தாந்தம், போதாந்தம், நாதாந்தம் யோகாந்தம், கலாந்தம் என இறைவன் உணரும் படி நிலையாக ஆறந்தம் - ஆறு+அந்தம் - ஆறு முடிந்தநிலைகளைக்

கடந்து அருவ நிலையாம் பேரின்பத்தை, இறைவனை உணர்தலாகும், இதை ஆனந்த பூர்த்தியாகித் தங்கும் படிக்கு இச்சை வைத்து உயிர்க்கு உயிராய்த் தழைத்தது எது? கங்குல் பகலற நின்றதெது (இரவு) கருத்திற்கிசைந்தது அதுவே என்கிறார்.

இனி ஆறந்தங்களை விளக்கமாய்க் காண்போம்,

1. வேதாந்தம் - வேதம் என்பது அறிவு விளங்கும் இடம், அதாவது பேதமின்றி அறிவு மயமாய் விளங்கி நிற்பது.

2. சித்தாந்தம் - உயிர்கள் என்றும் உள்ளவை. இறைவன் என்று தோன்றினானோ அன்றே உயிர்களும் தோன்றி விட்டன. இதைச் சைவ சித்தாந்தம் பசு-உயிர் பதி-இறைவன் எனச் சுட்டுகிறது. இந்த இரண்டும் வேறில்லை என்பது வேதாந்தம், அதாவது கடல் - இறைவன், அக்கடலில் ஒருகுடம் தண்ணீர் எடுத்தால் அது உடலோடு உயிர் கூடிய நிலை. குடம் உடைந்து விட்டால் மீண்டும் குடத்தில் உள்ள நீர் கடலில் கலந்து விடும். இதை நந்தவனத்தில் ஓராண்டி அவன் நாலாறு மாதமாய்க் குயவனை வேண்டிக் கொண்டு வந்தானொரு தோண்டி அதைக் கூத்தாடிக் கூத்தாடிப் போட்டுடைத்தாண்டி என்கிறார் ஒரு சித்தர்.

3. போதம் + அந்தம் - போதம் - அறிவு; அந்தம் முடிவு. அதாவது அறிவே சோதி வடிவம் என்கிறார் வள்ளலார்; அதுவே அருட்பெருஞ்சோதி என்கிறார்.

4. நாதாந்தம் - நாதம் - ஒலி. ஒலிகளின் தாயகமாய் விளங்குவதே ஓங்கார நாதமெனும் ஒலி. ஓங்காரம் குடிலை மந்திரம் எனவும் அழைக்கப்படும். மூச்சை ஒரு நிலைப்படுத்தி ஓம் .... என எவ்வளவு நேரம் சொல்கிறோமோ அந்த அளவிற்கு உயிராற்றல் பெருகும், இந்த நிலையில் மனம் ஒரு நிலைப்படுவது.

5. யோகாந்தம் - யோகம் + அந்தம் இதையே இன்று வருமோ நாளைக்கே வருமோ அல்லது மற்றென்று வருமோ துன்றுமல வெம்மாயை அற்று வெளிக்குள் வெளி கடந்து சும்மா இருக்கும் சுகம் என்கிறார் வள்ளலார். கந்தரனு பூதியில் அருணகிரி நாதப் பெருமான் சும்மா இரு சொல்லற என்கிறார்.

6. கலாந்தம் - இது மூச்சை அடக்கி முத்தெடுக்கும் நிலை, மூச்சின் ஒரு

பகுதி; இன்னொன்று கலை உணர்வு, கல்வி, மனத்தில் அசைவை ஏற்படுத்துவது. அசைவை அதாவது மன அசைவை அசையா நிலைக்குக் கொண்டு வருவது; இதுவே கலாந்தம். இதையே ஆறு ஆறு காட்டிய அருட்பெருஞ்சோதி என்கிறார். வள்ளலார் முதல் ஆறு எண்ணைக் குறிப்பது அடுத்த ஆறு வழி அல்லது முடிவைக் குறிப்பது. அடுத்து

19.ஐயமும் திரிபும் அறுத்து எனது உடம்பினுள்
20. ஐயமும் நீக்கிய அருட்பெருஞ்சோதி

இதன் பொருள் : நாம் போற்றி வணங்கும் அருட்பெருஞ்சோதி ஆண்டவர் நமக்கு உயிரிலும் உடம்பிலும் உண்டாகும் குறைகளை நீக்கி அருள் புரிகின்றார், இப்பொருள் 19ஆம் வரியாம் ஐயமும் அறுத்தெனது உடம்பினுள் என்பது வரையான பொருள், இனி 20ஆம் வரியில் குறிக்கும் ஐயம், உடம்பினுள் தோன்றும் கபம் அல்லது சளியை நீக்கும் அருட்பெருஞ்சோதி என்பது பொருள். இச்சளித் தொல்லையால் இரத்தம் முதலிய உயிரணுக்கள் கெட்டு உயிர்ப்பு ஆற்றல் குறைந்து உயிர்க்கு இறுதி ஆகிவிடும் என்பது வள்ளலார் கருத்து. சன்மார்க்க சாதகர் நாடோறும் கரிசலாங்கண்ணியை உட்கொள்ளச் சளி நீங்கும், காறிக் காறிக்கரி சாலையிலேயிடு கபம் மாறும் என்பது ஆன்றோர் வாக்கு, எனவே உயிரினுள் மெய்யருள் ஒளியைக் காட்டி, அதனை உணர்விலும் உடலிலும் நிரப்பி, ஐயம் போக்கித் தூயபிரணவ மெய்யறிவு ஆற்றலுடன் நாம் வாழ அருட்பெருஞ்சோதியைப் போற்றுவோம். கரோனா எனும் தற்போது கூறப்படும் கடும் நோய் சளியால் வருவதே என்பதை 19ஆம் நூற்றாண்டிலேயே வள்ளலார் கூறியுள்ளார் என்பது எண்ணத்தக்கது.

## 11.ஒன்று இரண்டு அன்றெனல்

21.ஒன்றென இரண்டென ஒன்றிரண்டென இவை
22. அன்றென விளங்கிய அருட்பெருஞ்சோதி பொருள் : இறைவன் ஒன்றெனும் உருவமாகவும் இரண்டெனும் அருவமாகவும் விளங்குகிறான். ஒளி வடிவமாகிய இறைவன் அடுத்து ஒன்று இரண்டு எனும் உருவருவமாயும் ஒளி வடிவாம் இறைவன் விளங்குகிறான்.

இதை அருணகிரிநாதப் பெருமான் உருவாய் அருவாய் உளதாய் இலதாய் எனக் கந்தரனுபூதி 51ஆம் பாடலில் குறிப்பிடுவார், அடுத்து அன்றென என்பது மூலப் பேரணு வாகியாகிய பேரொளிப் பிழம்பை உணர்த்துவதாகும்.

இதையே வெட்ட வெளிசுத்த வெளி என்கின்றனர் சித்தர்கள் சுத்த வெளியே பேரொளிப்பிழம் பாகிய அருட்பெருஞ்சோதி ஆண்டவராவார், சங்கர நாராயணன் உமையொருபாகன் என்பவை ஒரு வடிவில் இருதெய்வ இயல் உண்மையைக் காண்பதாம், நிறைவில் இறைவன் பேரொளிப் பிழம்பாய் எல்லா உயிர்களையும் தம்முள் அடக்கிய அருட்பெருஞ்சோதி ஆண்டவர் என்கிறார் வள்ளற் பெருமான், எத்துணையும் பேதமுறாது எவ்வுயிரும் தம்முயிர் போல் எண்ணி ஒத்துரிமை உடையவராய் யாவர் அவர் உவக்கின்றார் அவரே சுத்த சித்துருவாய் அந்த உளம் கொண்டவரிடம் உறையும் இறைவன் என்கிறார்.

### 12. ஓதாதுணர்தல்

23. ஓதாது உணர்ந்திட ஒளி அளித் தெனக்கே

24. ஆதாரமாகிய அருட்பெருஞ்சோதி

மேற்கண்ட 23,24ஆம் வரிகளுக்குகான பொருள். ஓதப்படாத மெய்ப்பொருளை அருட்சோதியாய் விளங்கும் இறையாற்றலைத் தெருவிடத்தே விளையாடித் திரியும் பருவத்தில் வள்ளலார் அருட்பெருஞ்சோதி ஆண்டவரால் ஆட்கொள்ளப்படுகிறார். ஓதப்படாத அம்மெய்ப் பொருள்தான் அருட்பெருஞ்சோதி. ஓம்+காரமெனும் ஓங்காரத்துள்ளிருக்கும் நாத ஒலியாய் வெளிப்பட்டு ஓதல் எனும் செயலை வள்ளலாருக்கு உணர்த்துகின்றார் அருட்பெருஞ்சோதி ஆண்டவர். ஓங்காரம் ஓம் எனும் ஒலி வடிவமாய் நம் காதில் விழுகிறது. ஓதப்படும் ஒலி மொழியே ஓத்து எனப்பட்டது. அதை இறைவன் மறைபொருளாய்ச் செவி வழியே வள்ளலார்க்கு உணர்த்துகிறார். இதைக் குரு உபதேசம் என்பர். குரு தன் மாணவனுக்கு ரகசியமாய் காதில் ஓதும் மந்திரம் ஓத்து எனப்பட்டது. வேதம் எனப்பட்டது. மனபேதத்தை நீக்குவது வேதம்.

அருள் ஒளியால் இறையருளை ஓதா துணர்ந்தவர் வள்ளலார், இதைத் தம் அருள் விளக்கப் பாமாலையில் விளக்குகிறார், அப்பதிகம் இதோ,

தவறாத வேதாந்த சித்தாந்தம் முதலாச்
சாற்றுகின்ற அந்த மெலாம் தனித்துரைக்கும் பொருளை
இவறாத சுத்த சிவ சன்மார்க்க நிலையில்
இருந்தருளாம் பெருஞ்சோதி கொண்டறிதல் கூடும்
எவராலும் பிறிதொன்றால் கண்டறிதல் கூடா(து)
என்னாணை என் மகனே அருட்பெருஞ்சோதியைத்தான்
தவறாது பெற்றனை நீ வாழ்க என்ற பதியே
சபையினடத்தரசே என் சாற்றும் அணிந்தருளே

என இறைவனே தமக்குச் சுத்த சிவ சன்மார்க்க நெறியை ஊட்டியதாய் வள்ளலார் குறிப்பிடுகிறார்.

இவ்வாறு வள்ளலாருக்கு அருட்பெருஞ்சோதி ஆண்டவர் ஓதாதுணர்த்தினார்.

### 13. ஔவியம் ஆதிதவிர்த்த இயல்

25. ஔவியம் ஆதியோர் ஆறும் தவிர்த்தபேர்
26. அவ்வியல் வழுத்தும் அருட்பெருஞ்சோதி

இவ்வரிகளின் பொருள், வள்ளலார்தாம் இயற்றிய தெய்வமணி மாலையில் காம உட்பகைவனும் கோப வெங்கொடியனும் எனும்பதி கத்தில் காமம், கோபம், லோபம் மோகம், மதம், மாச் சரியம் போன்ற ஏழு கொடிய தன்மைகளை ஓர் ஆறும் தவிர்த்த பேர் என்கிறார். ஔவியம் பொறாமை; இப்பொறாமையை அழுக்காறென ஒரு பாவி என்பார் வள்ளுவர். ஞானியர் பொறாமை நீக்கியவர்கள், ஓடும் செம் பொனும் ஒக்கவே (ஒன்றாகவே) கருதுபவர்கள் அவர்கள்.

இந்தக் கொடிய மாசுகளிலிருந்து நம் உடல், உயிர் ஆகியவற்றைத் தூயதாக்கி அவ்விறை ஆற்றலைப் போற்றி வழிபடுவதே அருட்பெருஞ்சோதி வழிபடுவது; இன்னொரு பொருளும் ஓர் ஆறும் தவிர்த்த பேர் எனும் வரிக்குக் கூறுவர் ஆன்றோர். மேலே கூறிய ஆறு சிற்றியல்புகளை நீக்கினால் இறைவனின் வீரியம், ஞானம், செல்வம், புகழ், ஈசுரத் தன்மை, அவா இன்மை ஆகிய ஆறு பேரியல்புகளை

இறையாற்றல் வழி உணர்ந்து ஆருயிர்கட் கெல்லாம் அன்புகாட்டும் உயிரிரக்கமே அருட்பெருஞ்சோதி ஆண்டவரை வழிபடுதலாம், இதையே தனிப் பெருங்கருணை அருட்பெருஞ்சோதி எனும் சன்மார்க்க நெறியாய் உலக மக்களுக்கு அளித்தார் வள்ளற் பெருமான்; மீண்டும் தொடர்வோம்,

## தெய்வக்கற்பு

(ம. கார்மேகம்)

இல்லையே என்னாத இயற்பகைக்கும் அடியேன் என்று சுந்தரர் பாராட்டிய நாயனார் இயற்பகை நாயனார். மைதிகழ் கண்ணியை ஈந்தவன் என்று திருத்தொண்டர் திருவந்தாதி குறிப்பிடுகிறது. அதனைச் சற்று விரிவாகத் திருத்தொண்டர் புராண சாரம் இயற்பகை நாயனாரின் மனைவியாரைப் பற்றிக் கற்பின் மேம்படு காதலி என்று கூறுகிறது. இவற்றின் அடிப்படையில்தான் இயற்பகை நாயனாரின் புராணம் பெரியபுராணத்தில் அமைந்துள்ளது.

தூர்த்த வேதியராய்வந்த சிவபெருமான் இயற்பகை நாயனார் என்னும் தொண்டர் மறுக்காத வண்ணம் அவருடைய மனைவியாரை வேண்டி வருகிறார். இயற்பகையாரும் தம் துணைவியாரைக் கொடுக்கிறார். துணைவியாரும் கணவரின் எண்ணம் நிறைவேறத் துணை நிற்கிறார். இறைவன் திருக்காட்சியைக் கணவரும் துணைவியாரும் காண்கின்றனர். இது புராணம்; இல்லையே என்னாத இயற்பகையின் பெருமை காட்டவந்த பெருமான் இயற்பகையாரின் துணைவியார் உயர்வினையும் உணர்த்துகிறார்.

கணவன் பெருமை காக்கும் துணைவியாகப் படைக்கப்பெறும் இயற்பகையாரின் துணைவியாரைப் பலவாறு சேக்கிழார் சிறப்பிக்கிறார். ஆயினும் பெயர் குறிக்கவில்லை. கற்பு மேம்படு காதலியார், விதிமணக்குல மடந்தை, மதுமலர்க்குழல் மனைவி, திருவினும் பெரியாள், புனையிழை, அருங்குலக்கொடி, சேயிழை, திருவுடை மனைவியார், ஏழை என்றெல்லாம் குறிப்பிடுகின்ற சேக்கிழார் உண்மைப்பெயரை மட்டும் கூறவில்லை. உண்மைப் பெயரை விட உள்ளம் உயர்ந்த பண்புகளுக்குரிய பெயர்களாக அடைமொழிகளை அடுக்குகின்றார் சேக்கிழார்.

அத்தகைய பெண்ணின் பெருமையைப் பேசும் புராணம் இயற்பகை நாயனார் புராணம் எனலாம். அதனைச் சற்று விரிவாகக் காணலாம். பூம்புகார் நகரில் வாழ்ந்த வணிகர் இயற்பகை நாயனார். மறைச் சிலம்படியாராகிய சிவபெருமானின் மிக்க சீரடியார் யாராக இருந்தாலும் அவர் வேண்டுவன யாவற்றையும் இல்லை என்னாமல் வழங்குகின்ற இயல்பில் நின்றவர் இயற்பகையார். அந்த இயல்புக்கு மாறாகத் தூர்த்தராய் வந்த பெருமான் கேட்பதைக் கொடுக்கிறார் இயற்பகை. கொடுக்க இயலாத ஒரு பொருளைக் கொடுப்பதனால் இயற்பகை. அவ்வாறு கணவனார் செய்த செயலுக்குத் துணை நின்றவர் அவர் துணைவியார்.

***ஒன்றும் நீர் எதிர்மறாது உவந்தளிக்கும் உண்மை கேட்டுநும்பால் ஒன்று வேண்டி இன்றுநான் இங்கு வந்தனன் அதனுக்கு. இசையலாம் எனில் இயம்பலாம்*** என்று அடியார் கேட்ட உடனேயே இயற்பகையார் யாதும் ஒன்றும் என்பக்கல் உண்டாகில் அன்னது எம்பிரான் மன்னுகாதல் அடியவர் உடைமை என்கிறார். தூர்த்த வேதியர் உன் காதல் மனைவியை வேண்டி வந்தது என்கிறார். மறுக்க முடியாத நிலைத்த காதல் பொருந்திய மனைவியை வேண்டி வந்தேன் என்கிறார். இங்கே சேக்கிழாரின் பக்திமைத்திறன் புலப்படுவதைக் காணலாம். வேண்டி வந்தேன் என்னும் போது விரும்பி வந்தேன் எனவும் வழக்காறாக அவருக்காக வேண்டி வந்தேன் எனவும் கொள்ளலாம். இங்கே கொடுத்தவர் யார் என்பதை விடக் கொடுக்கப்பட்ட பொருளின் சிறப்பைச் சேக்கிழார் உணர்த்துகிறார்.

உடனே நாயனார் எனக்கு முன்பு உள்ளதை வேண்டியது எம்பிரான் செய்த பேறு என்கிறார். உடனே துணைவியார் பக்கம் விரைகின்றார். தம்மனை வாழ்க்கைக் கற்பு மேம்படு காதலியாரைப் பார்த்து விதிமணக்குல மடந்தையே இன்று உன்னை இம்மெய்த்தவர்க்குக் கொடுத்தேன் என்கிறார்.

மனைவியார் மனம் கலங்கிப் பின் மனம் தெளிகின்றார். இன்று நீர் எனக்கு அருள்செய்தது இதுவேல்என் உயிர் நாதரேநீர் உரைத்த ஒன்றை நான் செய்யும் உரிமை வேறுளதோ என்கிறார் துணைவியார். கணவரை வணங்குகிறார்; கணவரும் தாழ்ந்து வணங்குகிறார்.

அடியார்முன் சென்று சேவடி பணிந்து திகைத்து நின்றனள் என்கிறார் சேக்கிழார். மனம் கலங்கிப்பின் தெளிந்த போதே கணவர் வழி நிற்பவராயினும் தன்னை வேண்டி வந்தவர் யாராக இருக்கலாம் என்று கலங்கி வந்திருப்பவர் இவர்தான் என்று தெளிந்து உரையாடுகிறார் துணைவியார். அந்த இடத்தில் திருவினும் பெரியாள் என்று இயற்பகையின் துணைவியாரைக் குறிக்கிறார் சேக்கிழார். மனம் தெளிந்தபடியே வந்திருப்பவர் யாரென அறிந்ததால் திகைத்து நின்றார்.

அவரைப் பெற்றுக்கொண்டதும் அடியார் பாதுகாப்புக்கேட்கிறார். இயற்பகையாருடைய உறவுகள் அடியாரைப் பித்தன் என்று சொல்லி அருங்குலக்கொடியை விட்டுப் போ என்று திரண்டு வருகின்றனர். மறை முனி அஞ்சியவரைப் போல் மாதினைப் பார்க்க மாதும் இறைவனே அஞ்ச வேண்டாம் இயற்பகை வெல்லும் என்கிறார்; இதுதான் மேலே கண்டவாறு அந்த அம்மையார் தெளிந்து கண்ட செய்தியாகும். கலங்கிப்பின் தெளிந்து கொண்ட செய்தியால் தான் அடியாரைப் பார்த்து இறைவனே அஞ்சவேண்டாம் என்று கூறும் நிலையில் அவர் உயர்த்தப்படுகிறார். அதனால் தான் சேக்கிழார் சிவனடியார் பின்னே செல்லும் அம்மையாரைத் திருவுடை மனைவியார் என்று பாராட்டுகின்றார். அதுமட்டுமன்று இருவரால் அறிய ஒண்ணா ஒருவர்பின் செல்லும் ஏழை என்கிறார். திருமாலும் பிரம்மாவும் அறிந்துகொள்ள இயலாத ஒப்பற்றவராகிய சிவபெருமானின் பின்னே செல்லும் ஏழை என்கிறார். அந்தப் பேறு அம்மையாருக்கு அப்போதே கிடைத்து விட்டது.

வந்தவர் பெருமான் என்பதையும் அதனை இயற்பகையின் துணைவியார் அறிந்து தெளிந்து கொண்டதனால் இறைவனே அஞ்சவேண்டாம் என்று கூறியதையும் சேக்கிழார் உச்சத்தில் வைத்துப் பாராட்டுகிறார் எனலாம். ஏழை என்பது பெண் எனப் பொருள்படும்; இறைவன் என்று அறிந்துகொண்ட போதும் தன்னைக் கொண்ட கணவன்சொல் பேணுவதும் கடமையாகக் கொண்டதனால் அவர் இறைவன்பின்னே சென்ற பெண்ணாகக் காட்டப்படுகின்றார்.

மனைவியைக் கொடுத்துச் செய்வதற்கரிய செய்கை செய்த நற்றொண்டர் இயற்பகையார்; பொய்தரும் உள்ளம் இல்லான்

பார்க்கிலன் என்று மறையவன் அழைக்கலானான் என்கிறார் சேக்கிழார். துணைவியார் அறிந்து கொண்ட இறைவனை இயற்பகையார் இன்னும் பார்க்க இயலவில்லை என்பதைக்குறிப்பால் உணர்த்துகிறார் சேக்கிழார்.

செயற்கரும் செய்கை செய்த தீரனே ஓலம் என்று மாலயன் தேடநின்ற மறையவன் ஓலமிட வந்து பார்க்கிறார் இயற்பகையார். முனிவரைக்காணவில்லை; தன் மனைவியை மட்டும் கண்டார்; இறைவன் தன் துணையுடனே வானில் தோன்றி இருவர்க்கும் காட்சி தந்தான்; இருவரையும் தம்முடன் வரச்சொல்லி இறைவன் ஆணையிடுகின்றான்.

இறைவன் இருவர்க்கும் பேறு அளித்த பெருமையைக் குறிப்பிடும் போது திருவளர் சிறப்பின் மிக்க தொண்டர் என்று இயற்பகையாரைச் சேக்கிழார் குறிக்கிறார். ஆனால் அவர்தம் துணைவியாரைக் குறிக்கும் போது தேற்றம் மருவிய தெய்வக்கற்பின் மனைவியார் என்கிறார். இயற்பகை சிறந்த தொண்டராயினும் நிறைவில்தான் இறைவன் என அறிகிறார். இயற்பகையின் துணைவியார் முன்னரே தெளிந்து அறிந்துகொண்ட காரணத்தால் தேற்றம் மருவிய தெய்வக்கற்பு உடையவர் என்று பாராட்டப் பெறுகிறார். எனவே இயற்பகையாருக்குரிய பெருமை அவர்தம் துணைவியாருக்கும் கிடைத்தது அவர்தம் தெய்வக்கற்பினால் தானே!

## திருக்குறள் தெளிவுரை

(ம. கார்மேகம்)

### கண்ணோட்டம்

(இரக்க உணர்வு)

1. **கண்ணோட்டம் என்னும் கழிபெருங் காரிகை**
   **உண்மையான் உண்டுஇவ் உலகு.**

கண்ணோட்டம் என்னும் - இரக்க உணர்வு எனப்படுகின்ற; கழிபெருங்காரிகை - மிகச்சிறந்த அழகு; உண்மையான் - மன்னனிடம் இருப்பதால்; உண்டு இவ் உலகு - இந்த உலகம் நிலைத்திருக்கிறது.

மன்னனிடம் இரக்க உணர்வு என்னும் மிகச்சிறந்த அழகு இருப்பதால் இந்த உலகம் நிலைத்து உள்ளது.

கழிபெரும் - ஒருபொருட்பன்மொழி;

**2. கண்ணோட்டத்து உள்ளது உலகியல் அஃதிலார்**
**உண்மை நிலக்குப் பொறை.**

கண்ணோட்டத்து - இரக்க உணர்வின்கண்; உள்ளது உலகியல் - உலக நடைமுறை நிகழ்வது; அஃதிலார் - அவ்வுணர்வு இல்லாதவர்கள்; உண்மை - இருப்பது; நிலக்குப் பொறை - இந்நிலத்திற்குச் சுமையாகும்.

உலக நடைமுறை இரக்க உணர்வின்கண் உள்ளது; அவ்வுணர்வு இல்லாதவர்கள் இருப்பது இந்நிலத்திற்குச் சுமையாகும்.

**3. பண்என்னாம் பாடற்கு இயைபுஇன்றேல் கண்என்னாம்**
**கண்ணோட்டம் இல்லாத கண்.**

பண்என்னாம் பாடற்கு இயைபு இன்றேல் - பாடலுக்குப் பொருந்தவில்லை என்றால் பண்ணால் என்ன பயன்; கண்என்னாம் கண்ணோட்டம் இல்லாத கண் - இரக்க உணர்வு இல்லை என்றால் கண்ணினால் என்ன பயன்.

பாடலுக்குப் பொருந்தாத பண்பயனற்றது; அதுபோல இரக்க உணர்வு இல்லாத கண்ணும் பயனற்றது.

**4. உளபோல் முகத்துஎவன் செய்யும் அளவினால்**
**கண்ணோட்டம் இல்லாத கண்.**

உளபோல் முகத்து - முகத்தில் உள்ளது போல் தோன்றி; எவன்செய்யும் - என்ன செய்யும்; அளவினால் கண்ணோட்டம் - அளவு காரணமாக இரக்க உணர்வு; இல்லாத கண் -இல்லாத கண்;

அளவு காரணமாக இரக்க உணர்வு இல்லாத கண் முகத்தில் உள்ளது போல் தோன்றுவதால் என்ன செய்யும் ஒரு பயனும் இல்லை.

**5. கண்ணிற்கு அணிகலம் கண்ணோட்டம் அஃதுஇன்றேல்**
**புண்என்று உணரப் படும்.**

கண்ணிற்கு அணிகலம் கண்ணோட்டம் - கண்ணுக்கு அணியும் அணி என்பது இரக்க உணர்வு; அஃது இன்றேல் - இரக்க உணர்வு இல்லை என்றால்; புண்என்று உணரப்படும் - கண்ணன்று அது புண்என்று அறியப்படும்.

இரக்க உணர்வுதான் கண்ணுக்கு அணியும் அணிகலன்; அஃது இல்லை என்றால் அக்கண்கள் புண் என்று அறியப்படும்.

**6. மண்ணொடு இயைந்த மரத்தனையர் கண்ணொடு**
**இயைந்துகண் ணோடா தவர்.**

மண்ணொடு இயைந்த - மண்ணோடு பொருந்திய; மரத்தனையர் - மரம்போன்றவர் ஆவர்; கண்ணொடு இயைந்து - கண்ணோடு பொருந்தி; கண்ணோடாதவர் - இரக்க உணர்வு இல்லாதவர்.

கண்ணோடு பொருந்திய இரக்க உணர்வு இல்லாதவர் மண்ணோடு பொருந்திய மரம் போன்றவர் ஆவர்.

மண்ணொடு, கண்ணொடு - மூன்றாம் வேற்றுமை

**7. கண்ணோட்டம் இல்லவர் கண்ணிலர் கண்ணுடையார்**
**கண்ணோட்டம் இன்மையும் இல்.**

கண்ணோட்டம் இல்லவர் - இரக்க உணர்வு இல்லாதவர்; கண்ணிலர் - கண்ணில்லாதவர் ஆவர்; கண்ணுடையார் - கண் உடையவர்கள்; கண்ணோட்டம் இன்மையும் இல் - இரக்க உணர்வு இல்லாதவராய் இருப்பதும் இல்லை.

இரக்க உணர்வு இல்லாதவர் கண்ணில்லாதவர் ஆவர்; கண்ணுடையவர்கள் இரக்க உணர்வு இல்லாதவர்களாய் இருப்பதில்லை.

**8. கருமம் சிதையாமல் கண்ணோட வல்லார்க்கு**
**உரிமை உடைத்துஇவ் உலகு.**

கருமம் சிதையாமல் - தன்செயல் அழியாமல்; கண்ணோட வல்லார்க்கு - இரக்க உணர்வு கொள்ள வல்லமை உடையவர்க்கு; உரிமை உடைத்து இவ் உலகு - இந்த உலகம் உரிமை உடையது.

தன்செயல் அழியாமல் இரக்க உணர்வு கொள்ள வல்லமை உடையவர்க்கு இந்த உலகம் உரிமை உடையது.

**9. ஒறுத்துஆற்றும் பண்பினார் கண்ணும்கண் ணோடிப்**
**பொறுத்துஆற்றும் பண்பே தலை.**

ஒறுத்துஆற்றும் - தன்னைத் தண்டிக்கும்; பண்பினார் கண்ணும் -

இயல்பு உடையவர்களிடத்தும்; பொறுத்து ஆற்றும் - அதனைப் பொறுத்துக் கொண்டு இரக்கம் கொள்ளும்; பண்பே தலை - இயல்பே தலையாயது ஆகும்.

தன்னைத் தண்டிக்கும் இயல்பு உடையவர்களிடத்தும் அதனைப் பொறுத்துக் கொண்டு இரக்கம் கொள்ளும் இயல்பே தலையாயது ஆகும்.

**10. பெயக்கண்டும் நஞ்சுண்டு அமைவர் நயத்தக்க**
**நாகரிகம் வேண்டு பவர்.**

பெயக்கண்டும் நஞ்சுண்டு அமைவர் - தமக்குத் தரப் பெறுவது நஞ்சு என்று தெரிந்த போதும் அதனை மறுக்காமல் உண்பர்; நயத்தக்க நாகரிகம் வேண்டுபவர் - விரும்பத்தக்க நாகரிகமாகிய இரக்க உணர்வை விரும்புகிறார்கள்.

விரும்பத்தக்க இரக்க உணர்வை விரும்புகிறவர்கள் தமக்குத் தரப் பெறுவது நஞ்சு என்று தெரிந்த போதும் அதனை மறுக்காமல் உண்பர்.

*(தொடரும்...)*

## திருவிளையாடற்புராணம்

### சுந்தரப் பேரம்பு எய்தது

வங்கிய சேகர பாண்டியனது செங்கோல் ஆட்சியினாலே நாட்டிலே நிலமகளும், திருமகளும், கலைமகளும் மங்கலமான வாழ்வு பெற்று விளங்கினர்.

அதே நாட்களில் சோழ நாட்டை விக்கிரம சோழன் என்பவன் ஆண்டுவந்தான். அவன் வாகை மாலை சூடிய வெற்றிப் பெருவீரன். வங்கிய சேகரனோடு சமர்புரிய எண்ணிப் பெரிய படையுடன் கிளம்பினான். வடதிசை வேந்தர் பலரும் அவனுக்குத் துணை தந்தனர். பலவகைக் கருவிகள் இடி முழக்கம் செய்யத் தனது காவிரிப் பதியிலிருந்து புறப்பட்டுப் பாண்டிய நாட்டை வந்தடைந்தான்.

சோழ நாட்டுப் படைகள் பாண்டி நாட்டுக்குள் புகுந்ததும் பசுக் கூட்டங்களைக் கவர்ந்தும், மலர் வாவிகளைப் பாழாக்கியும், ஏரிகளை

உடைத்தும், வழிப்பறிக் கொள்ளை செய்தும் போர் புரிவதற்கான வகைகளைக் கையாண்டனர். வங்கியன் அதனை அறிந்தான். நான் என்ன செய்ய முடியும்? சோழர் படையோ சமுத்திரம் போலப் பெருகியுள்ளது; அதை எதிர்த்து எவ்வாறு சண்டை செய்யக்கூடும்? சோமசுந்தரப் பெருமானை அண்டிக் குறையிரப்பதைத் தவிர வேறு வழியில்லை என்று எண்ணியவனாகித் திருக்கோவில் அடைந்தான்.

பாண்டியன் திருக்கோவில் சேர்ந்து சிவபெருமானை வணங்கி, வேண்டியதருளும் பெருமானே! விக்ரம சோழன் எளியேனோடு அமர் செய்யும் பொருட்டுத் தனது பெருஞ் சேனையோடும், பிறநாட்டு வேந்தர்களோடும் வந்து தங்கியுள்ளான். எதிர்த்துப் போராட எளியேனிடத்திலே போதிய அளவு பெருத்த சைனியம் இல்லை. எனக்கு வேறு கதியில்லை; எம்பெருமானே! அடியேனைக் காத்து அருள் புரிவது தேவரீர் கடமை, என்று விண்ணப்பம் செய்தான். அதுசமயம் சோமசுந்தரப் பெருமான் ஆகாசவாணியாக, பாண்டிய! நீ சென்று சோழனோடு போர் செய்; நாமும் அங்கே வருவோம்; உனக்குத் துணையாகி நின்று வெற்றி பெறும்படி செய்வோம் என்று மொழிந்தருளினார். அம் மொழிகளைக் கேட்டான் பாண்டியன்; அளவிலாத மகிழ்ச்சியடைந்தான். சிவபெருமானைப் பணிந்து ஏத்தியவண்ணம் திருக்கோவிலை விட்டு வெளியே வந்தான். அந்தச் சமயம் ஓர் ஒற்றன் ஓடோடியும் வந்து, விக்கிரம சோழனது சேனை ரிஷப மலைக்குப் பக்கத்திலே வந்து விட்டது, என்று சொன்னான்.

வங்கிய சேகர பாண்டியனும் பல கருவிகள் முழங்கத் தனது சதுரங்க சேனைகள் புடைசூழப் போர் செய்யச் சென்றான். சோழனது பெருஞ்சேனை ஆளவாய் மதிலுக்கு வெளியே வளைத்துக்கொண்டு நின்றது. வஞ்சிமாலை சூடிய பாண்டிய சேனா வீரர்கள் ஆர்ப்பரித்து நெருங்கினர். இரண்டு பக்கத்துப் படை வீரர்களும் வஞ்சினம் கூறிக் கடும்போர் விளைக்கலாயினர்.

தேருக்குத் தேர், யானைக்கு யானை, குதிரைக்குக் குதிரை, வீரருக்கு வீரர், வாளுக்கு வாள், வேலுக்கு வேல் என்று எதிர் எதிர் நின்று தாக்கி வெம்போர் புரிந்தனர், பாண்டியன் தனது தேரில் ஏறிக்கொண்டு

சென்று சோழனை எதிர்த்தான். பல வகையான பேரொலிகளும் பெருங்கூச்சல்களும் எழுந்தன. இப்படியாக இரு பக்கத்துப் படைகளும் பின்னடையாமல் சண்டை செய்து கொண்டிருந்தன. அந்த நேரத்திலே சோழன் வடவர் படையோடு கடுமையுடன் எதிர்த்து வந்தான். அது கண்டு ஆற்றமாட்டாத பாண்டிய சேனை மருண்டு ஓடிச் சிதைந்தது. எல்லாவற்றையும் அப்படி அப்படியே போட்டுவிட்டுச் சென்றனர். வீரர்கள் எல்லாரும் அதைப் பார்த்து, சோழன், பாண்டியன் தோற்றுவிட்டதாகவே எண்ணினான்; கருவம் மிகுந்ததால் தனது வெற்றிச் சங்கை எடுத்து ஊதி முழக்கம் செய்தான்.

சோமசுந்தரப் பெருமான் அப்போதுதான் பாண்டியனுக்கு அருள்புரியத் திருவுள்ளம் கொண்டார். முன்பொருக்கால் தண்ணீர்ப் பந்தல் வைத்தும், சோழனை மடுவில் வீழ்த்தியும் பாண்டியனுக்கு அருள் பாலித்த பெருந்தகையான சிவபெருமான் வேட மன்னராக உருவம் ஏற்று வந்து பாண்டியன் படைக்குத் தலைவராக ஆனார். சிவவேடப் பெருமான் தமது வில்லை வளைத்துக் கூரிய அம்புகளைச் சோழ சேனையர் மேல் விடுத்தார். அந்த அம்புகளிலெல்லாம் சுந்தரேச என்ற அருமைத் திருப் பெயர் பொறிக்கப்பட்டிருந்தது. வெற்றிச் சங்கு ஊதிய சோழனது சேனா வீரர்களில் பதினாயிரம் பேர்களது உயிர்களைச் சுந்தரப் பேரம்பு ஒவ்வொன்றும் குடித்தது. சோழன் அது கண்டு பெருந்திகைப்புக் கொண்டான். ஓர் அம்புக்கு இவ்வளவு ஆற்றல் ஏது? என்று சந்தேகப்பட்டு ஆச்சரியமடைந்தான். அக் கணைகளுள் ஒன்றைக் கொணரச் சொல்லிப் பார்த்தான், அதிலே சுந்தரேசன் என்று தீட்டியிருப்பதைக் கண்டான். ஆகா! இது பாண்டிய மன்னனுக்கு ஆலவாய் அண்ணல் துணை தரும் செயல் என்று எண்ணினான்; பயமடைந்து தனது சேனைகளுடன் திரும்பச் செல்வதானான்.

திரும்பிச் செல்லும் சோழ வேந்தனைப் பார்த்து வடநாட்டு வேந்தர் வியந்தனர். சோழனைத் தடுத்து நிறுத்தினர். அவனைக் கோபித்துத் திட்டி நீ தோற்று ஓடலாமா? உனது வீரம் என்ன? பெருமை என்ன? என்று கூறி மறித்தனர். மறுபடியும் சோழன் வடவர் துணை கொண்டு பாண்டியன் சேனைமீது மிகவும் கடுமையுடன் தாக்கினான். பல

அம்புகளைத் தொடுத்தனர் சோழ வீரரும் பிறரும். வேடச் சிவனார் அது கண்டார். தனது பெருவில்லை வளைத்து ஓர் அம்பினை விடுத்தார். சோழ வீரரும் வேறு வீரரும் விடுத்த கணைகளை யெல்லாம் அது கண்டித்தது. பின்னர் பத்துப் பத்துக் கணைகளாக எய்து ஆயிரம் ஆயிரந்தேர்களையும், யானைகளையும், குதிரைகளையும் வீரர்களையும் வீழ்த்தினார். அதன் பின்னர் நூறு நூறு அம்புகளை விடுத்துப் பதினாயிரம் பதினாயிரம் தேர்களையும், யானைகளையும் வீரர்களையும் அழித்தார். அதற்கும் பின்னர் ஆயிரமாயிரம் கணைகள் தொடுத்து லட்சோபலட்சமாக எல்லாவற்றையும் அழித்தார். போர்க்களம் எங்கும் பிணக்குவியல்; இரத்த வெள்ளம் ஆறாகிப் பெருகி ஓடியது. கழுகுகள், காக்கைகள், நரிகள் எல்லாம் பெரு விருந்து கொண்டாடின, கூளிப்பேய்கள் களிநடம் புரிந்தன.

சோழ வேந்தனுக்குத் துணையாகச் சார்ந்து நின்று அயல்நாட்டு அரசர் எல்லாரும் சுந்தரப் பேரம்பு பட்டுமடிந்தனர். இதனை யெல்லாம் கண்டு மயங்கிய சோழன் எஞ்சிய வீரர்களுடன் இகழ்ச்சியும் அச்சமும் தன்னைச் சூழ்ந்துவர ஓட்டம் பிடித்தான்.

வங்கிய சேகர பாண்டியனது வெற்றி முகம் கண்ட சிவவேடப்பெருமான் அருள் நகை சிறிதே புரிந்து மறைந்தருளினார்.

பின்னர் பாண்டியன் வெற்றிச் சங்கை முழக்கினான். தனது பட்டத்து யானைமீதமர்ந்து ஆலவாய்ப் பதியை அடைந்தான். அங்கே மங்கல மடந்தையர் அஷ்டமங்கலங்கள் ஏந்தி எதிர்கொளப் பெருமிதத் தோடு அரண்மனை புகுந்தான்.

சோமசுந்தரப் பெருமானுக்கு நிலையான பூசைப் பொருள்களைக் கொடுத்தான். நவரத்தினங்கள் பதிக்கப்பட்ட ஆபரணங்களையும் ஒளி தெறிக்கும் மாணிக்கம் இழைத்த பொன்னாலான வில்லும், சுந்தரப் பேர் எழுதி அம்பும் செய்து சாத்தினான் பாண்டியன்.

அறநெறி வழுவாமல் நீதியுடன் செங்கோல் செலுத்தி வாழ்ந்து வந்தான் வங்கியசேகர பாண்டியன்.

*(தொடரும்...)*

**விளம்பரங்கள் வரவேற்கப்படுகின்றன**

| | |
|---|---|
| பின்அட்டை முழுப்பக்கம் கட்டணம் | ரூ. 1000/- |
| அட்டை உள்பக்கம் கட்டணம் | ரூ. 750/- |
| நூலின் உள்பக்கம் கட்டணம் | ரூ. 500/- |

**தொடர்புக்கு – பதிப்பாசிரியர் "திருநெல்லை"**

---

ஆன்மீக அன்பர்களும் கோவிலூர் மடாலயத்தின் நிகழ்வுகளில் ஆர்வம் கொண்ட பக்தர்களும் திருநெல்லை அம்மன் பெயரில் வெளிவரும் ஆன்மீகத் திங்கள் இதழுக்குச் சந்தா செலுத்தி உறுப்பினராகுமாறு வேண்டுகிறோம்

– பதிப்பாசிரியர்